[28th March 1958

MR. SPEAKER : I have no objection if the Hon. Minister is prepared to answer that question. But I do not think it arises from the main question.

THE HON. SRI M. A. MANICKAVELU : I bow to the ruling of the Hon. Speaker. (Laughter.)

*Village chavadies*

* 451 *Q.*—SRI S. LAZAR (on behalf of Sri V. Arunachala Thevar) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) how many public buildings (village chavadies) are there in the Pudukkottai division in all the three taluks; and

(*b*) how many of them are in a dilapidated condition?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 82.

(*b*) 14.

SRI S. LAZAR : இந்த பாழடைந்த சாவடிகளைத் திரும்ப அமைக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மிகவும் பாழடைந்த சில சாவடிகளை ரிப்பேர் செய்ய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். சில சாவடிகள் ரொம்ப மோசமான நிலைமையில் இருப்பதால், அவைகள் புதியதாகக் கட்டப்படும்.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II. CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 OF THE MADRAS ASSEMBLY RULES *RE* THE DEATH OF ONE ARUMUGHAM IN POLICE CUSTODY AT KODAMBAKKAM.

MR. SPEAKER : The hon. Member Sri K. Vinayakam has given notice of a motion under Rule 40, to call the attention of the Hon. Minister for Home to a matter of urgent public importance, namely, the serious situation arising out of the death of Arumugham in the Police Station at Kodambakkam. I think the matter is under enquiry. So, I would request the hon. Member to be careful in what he wishes to say. I request him to be discreet.

9-30 a.m. SRI K VINAYAKAM : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த விஷயம் இப்போது விசாரணையில் இருக்கிறது என்பது எனக்கு நன்கு தெரியும். அந்த விசாரணையை பாதிக்கும் அளவுக்கு நான் எதுவும் சொல்லமாட்டேன். அதேமாதிரி அமைச்சர் அவர்களும் இந்த விசாரணையை பாதிக்கும் அளவிற்கு எதுவும் சொல்வார் என்று எதிர் பார்க்கவில்லை. இந்த சம்பவம் நடந்த தொகுதியைச் சேர்ந்தவன் நான். அந்தத் தொகுதியில் இப்பேர்பட்ட மரணம் ஏற்பட்டது ஒரு பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியிருக்கிறது என்பதை நான் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. பத்திரிகைகளில் இதைப்பற்றி அதிகமாக வருவது இன்னும் பரபரப்பக் காரணம். இது ஒரு பெரிய அதிர்ச்சியை—பரபரப்பை—உண்டாக்கியிருக்கிறது. இந்த வாலிபன் செய்த குற்றம் என்னவென்று சொல்லப்படுகிறதென்றால்—பத்திரிகைகளிலிருந்து பார்க்கிறோம்—ஏதோ ஒன்றிரண்டு சாமான்களைத் திருடினான் என்று சொல்லி, அவன் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகப்பட்டு இறந்து போயிருக்கிறான். அவன் இறந்ததற்குக் காரணம் தெரியாது. ஒரு சிலர் போலீஸார் அடித்துக் கொன்றுவிட்டார்கள் என்று சொல்லுகிறார்கள். போலீஸ்